11th February 1959]

SRI K. R. VISWANATHAN : இந்த நோயானது தேசிய நீர் வழங்கு திட்டத்தின் (National water-supply and sanitation scheme) கீழ்கொண்டு வரப்பட்டிருக்கிறது என்பது உண்மையா ? அப்படியானால் அதன்படி நீர் வழங்க என்ன நடவடிக்கை சர்க்காரால் எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கிறது. ஏதாவது நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டிருக்கிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : நாஷனல் வாட்டர் சப்ளை ஸ்கீம் கீழ் இருக்கும் என்று நினைக்கிறேன். மாகாணத்தில் ஐந்து ஜில்லாக்களில் இது அமுலில் இருக்கிறது. இந்த நோய் தென்னார்காட்டில் திருச்சியைவிட அதிகமாக இருக்கிறது. நாங்கள் ஏதோ வசதிகளை ஏற்படுத்திக்கொண்டு திட்டம் போட்டு அதை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறோம். அதனால் அதை அமுல் பண்ணியே தீருவோம்.

SRI A. A. RASHEED : Sir, from the statement placed on the table of the House, it is seen that North Arcot and South Arcot districts have been much affected. May I know the reasons therefor?

THE HON. SRI M. A. MANICKAVELU : That is probably because there, people take water from step-wells and ponds. I have got information that Harijans are not mostly affected and that is because, it is said, they do not take water from ponds and other such places, but only from draw-wells.

*Hostel for Adivasi students*

* 208 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லா, தாளவாடி மலைப்பிரதேசத்தில் தலமலையில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஆதிவாசிகளுடைய. மாணவர்கள்—மாணவிகளுடைய ஹாஸ்டலானது எந்தக் கட்டிடத்திலிருக்கிறது?

(ஆ) சர்க்கார் மூலம் ஹாஸ்டல் கட்டிடம் கட்டப்படுவதற்கான பரிசீலனை நடத்தப்பட்டு வருகிறதா?

THE HON. SRI P. KAKKAN : (*a*) The residential school for Scheduled Tribes at Talamalai is housed in the District Board Chatram.

(*b*) No, Sir.

SRI P. G. MANICKAM : சார், ஜில்லா போர்டு சத்திரத்திலே இந்த ஹாஸ்டல் இருப்பதால் அங்கு படிக்கும் மாணவர்களுக்கு அநேக இடைஞ்சல்கள் உண்டாகிக் கொண்டு வருகின்றன. ஆகவே இந்த 1959-ம் வருஷத்திலாவது அங்கு ஒரு ஹாஸ்டல் கட்ட சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI P. KAKKAN : அந்தச் சத்திரமானது நல்ல கண்டிஷனில் தான் இருக்கிறது. இப்பொழுதுதான் 810 ரூபாய் செலவு செய்து அந்த ஜில்லா போர்டு சத்திரம் பழுது பார்க்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது இருக்கும் நிலைமையில் தனியாக வேறு கட்டிடம் கட்ட உத்தேசம் இல்லை.